நிவ்ருத்தியில் அஶக்தியுமிறே ஶோககாரணம்; இவை யித்தனையு மில்லாமையாலே ஶோகிக்கவேண்டாவென்கிறது;

எங்ஙனேயென்னில்; "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" என்று துஷ்கரத்வாதிதூஷித ஸாதநாந்தரங்களை த்யஜிக்கச்சொல்லுகையாலே ஸாதநாந்தரதர்ஶநமடியாக ஶோகிக்கவேண்டா; "மாமேகம்ஶரணம் வ்ரஜ" என்று ஸுகரஸாதநத்தைப் பற்றச்சொல்லுகையாலே அநுரூபஸாதநாதர்ஶநநிபந்தநமாக ஶோகிக்கவேண்டா; "மாம்" என்று வாத்ஸல்யாதி குணவிஶிஷ்டனைச்சொல்லுகையாலே ஸ்வதோஷமடியாகவும் அவனுடையவப்ராப்தியடியாகவும் தன்னுடைய தண்மையடியாகவும் அவனுடைய துர்லபத்வமடியாகவும் ஶோகிக்கவேண்டா; "ஏகம்" என்று நிரபேக்ஷமாகச் சொல்லுகையாலே ஸாபேக்ஷதையடியாக ஶோகிக்கவேண்டா; "ஶரணம்" என்று அவ்யவஹிதஸாதநமாகச் சொல்லுகையாலே வ்யவஹிதமென்று ஶோகிக்கவேண்டா; "வ்ரஜ" என்று மாநஸவ்யாபாரமாகச் சொல்லுகையாலே அருமையடியாக ஶோகிக்கவேண்டா; "அஹம்" என்று ஜ்ஞாநாதி குணபூர்ணமாகச் சொல்லுகையாலே அஸாமர்த்த்யமடியாக ஶோகிக்கவேண்டா; அதில் ஸர்வஜ்ஞத்வத்தாலே நிவர்த்த்யாம்ஶமும் ப்ராப்தவ்யாம்ஶமுமறியானென்று ஶோகிக்கவேண்டா; ஸர்வஶக்தித்வத்தாலே நிவ்ருத்திப்ராப்திகளில் அஶக்தனென்று ஶோகிக்கவேண்டா; அவாப்தஸமஸ்தகாமனுகையாலே அபூர்த்தியடியாக ஶோகிக்கவேண்டா; ஸ்வாமியாகையாலே அப்ராப்தனென்று ஶோகிக்கவேண்டா; க்ருபாவத்தையாலே கார்யம்செய்யுமோ செய்யானோவென்றஞ்சவேண்டா; "த்வா" என்று ஆகிஞ்சந்யத்தைச் சொல்லுகையாலே ஸ்வரக்ஷணாந்வயமடியாக வுபேக்ஷிக்குமென்று ஶோகிக்கவேண்டா; ஸர்வபாபவிமோசகனுகைபாலே விரோதிபாஹுள்யமடியாக ஶோகிக்கவேண்டா; (மோக்ஷயிஷ்யாமி) அவை தானே விட்டுப்போமென்கைபாலே நிவ்ருத்தியிலஶக்தியடியாக ஶோகிக்கவேண்டா;

ஆக, துஷ்கரத்வாதி தோஷதூஷித ஸாதநாந்தரங்களை த்யஜித்து வத்ஸலனுமாய் ஸ்வாமியுமாய் ஶீலவானுமாய் ஸுலபனுமாய் நிரபேக்ஷனுமாய் பரமாப்ததமனுமாய் நிரவதிகதயாவானுமாயிருக்கிற



வென்னைப் பற்றுகையாலும், (க) "సకృదేవం ప్రపన్నస్య కృత్యం నైవాన్యది ష్యతే-ஸக்ருதேவம்ப்ரபந்நஸ்ய க்ருத்யம்நைவாந்யதிஷ்யதே" என்று என்னையே நிரபேக்ஷோபாயமாகப்பற்றின வுனக்கு கர்த்தவ்யாம்ஶமில்லாமையாலும் ஸர்வஜ்ஞத்வாதி குணகனான நான் உன்னுடைய வவித்யாதி ஸகலபாபங்களையும் மறுவலிடாதபடிபோக்கி அஸங்குசிதமான வநுபவகைங்கர்யங்களிலே யந்வயிப்பித்து ஆநந்தநிர்ப்பரனும்படி பண்ணுகிறேனென்கையாலும் ஒரு ப்ரகாரத்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை; நீ உன்னுடைய ஸர்வப(ஃ)ரங்களையும் என்பக்கலிலேவைத்து வாழும் சோம்பனாய் செயல்தீரச்சிந்தித்து வாழ்ந்து கண்ணனைத் தாள்பற்றிக் கேடின்றிக்கேயிருக்கையாலே உன்னைப் பார்த்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை; ஸர்வஜ்ஞத்வாதிகுணவிஶிஷ்டனான நான் சன்மசன்மாந்தரம் காத்துத் தாளிணைக்கீழ்க்கொள்ளுமவனாய், இருவல்வினைகளும் சரித்து வீடுதிருத்தி விசும்பேறவைக்கப் பாரிக்கையாலே என்னைப் பார்த்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை; (உ) "துன்பமுமின்பமுமாகிய செய்வினையாய்" (ங) "உற்றவிருவினையாய்" (ச) "நல்வினையும்தீவினையுமாவன்" என்கிறபடியே விரோதியாகிறது என்னுடைய நிக்ரஹாநுக்ரஹங்களாய் *வினைபற்றறுசரும் விதியானநம்முடையபவதீநமாய் நாம் பொறுத்தோமென்னத் தீருமதாகையாலே விரோதியைப் பார்த்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை.

இனி ஶோகித்தாயாகில் நமக்கு ஶேஷமும் பாதந்த்ரமுமாய் அதவவபலஸாதநங்களிலந்வயமின்றிக்கே யிருக்கிற வுன்ஸ்வரூபத்தையுமழித்து உன்னைப் பலியுமாக்கி ஸ்வதந்த்ரனுமாய்க்கொண்டு ஆதித்யஸந்நிதியி லந்தகாரம் நில்லாதாப்போலே ஹேயப்ரத்யநீகனான நம்முடைய ஸந்நிதியிலே ஹேயம்நில்லாதென்கிறநம்ப்ரபாவத்தையுமழித்தாயாவுதி; (ரு) "ఈశ్వరోఽహమహంభోగీ-ஈஶ்வரோஹமஹம்போகீ" என்று அஹங்காரமமகாரதூஷிதனாய் "நநமேயம்" என்று மமகாரதூஷிதனாய், ரக்ஷகனான நானே "க்ஷிபாமி" "நக்ஷமாமி" என்னும்படி பண்ணிக்கொண்டு அதுக்கடியானபாபம் மூர்த்தாபிஷிக்தமாயிருக்க, ஶோகியாதிருந்த வறிவுகேட்டோபாதிபோரும்: நீயும் என்பக்கலிலே ந்யஸ்தபாரனாய் நானும்உன்கார்யம் எனக்கு(ஃ)பாமாகவேறிட்டுக்

---

(க)

(உ) தி-வாய்-௫-௧௦-௮

(ங) தி-வாய்-௪௦-௧௦-௮

(ச) ௪-திருவ-௫௭

(ரு) கீ-௧௮-௬௬

கொண்டு ஸகலபாபங்களையும் போக்குவேனென்பின்பு சோகிக்கையும், சோகித்தாயாகில் நீபண்ணின ப(ஃ)ரந்யாஸமும் வ்யர்த்தமாய் நான் பாபவிமோசநம் பண்ணுகிறேனென்றதும் நிரர்த்தகமாய் உன் கார்யத்துக்கு நீயேகடவையாய், பழையபாபபலாநுபவமும் நீயுமாய் விடுவிதி; ஆனபின்பு சோகத்தைவிட்டு நிர்ப்ப(ரு)ரனுமாய் நிர்ப்பயனுமாய் மத்ப்ராப்தியில் நிஸ்ஸம்சயனுமாய்க்கொண்டு ஸுகமேயிருவென்றதாயிற்று.

ஆக, த்யாஜ்யஸ்வரூபத்தையும், த்யாகம் ஸ்வீகாராங்கமென்னுமிடத்தையும், ஸ்வீகார்யமான வுபாயத்தின் சீர்மையும், தந்நைரபேக்ஷ்யத்தையும், உபாயத்வம் ஔபாதிகமன்றென்னுமிடத்தையும், ஸ்வீகாரம் மாநஸமென்னுமிடத்தையும், உபாயம் ஸர்வஶக்தியுக்தமென்னுமிடத்தையும், அதிகாரியுடைய வாகிஞ்சந்யத்தையும், நிவர்த்த்யமான பாபங்களையும், தத்பாஹுள்யத்தையும், தந்நிவ்ருத்திப்ரகாரத்தையும், அதிகாரியினுடைய நைர்ப்ப(ரு)ர்யத்தையும் சொல்லித் தலைக்கட்டுகிறது;

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

சரமஶ்லோகப்ரகரணம் முற்றிற்று.

திருவரங்கச்செல்வனாரென்கிற பரகாலார்யருளிச்செய்த

ரஹஸ்யார்த்த ப்ரதீபிகையென்கிற

பரகாலநல்லான் ரஹஸ்யம் முற்றிற்று.

4-3-85.